Regd. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6-TN-Ms C. P. P 55



**நல்வழி**

தாங்கிக் கொள்வது,
தளராது இருப்பது,
கண்ணியம் காப்பது,
இதுதான் நம்வழி.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**பகுத்தறிவு**

எனது சீர்திருத்தம் என்பதெல்லாம் பகுத்தறிவைக் கொண்டு ஆராய்ச்சி செய்து சரி என்றுபட்டபடி நடவுங்கள். என்பதேயாகும்.

- தந்தை பெரியார்



மலர் : 9 சென்னை 20-2-1985 புதன் ★ ★ ★ வெளியூர் 21-2-1985 வியாழன் இதழ் 124

## என் உடல்நிலை பற்றி வன்னெஞ்சக்காரர்கள் கிளப்பிவிட்ட வதந்திகளால் இன்னுயிர் இழந்தவர்களை எண்ணித் தேம்பி அழுகிறேன் - திகைத்து நிற்கிறேன்

## ஐயோ... அற்ப புத்திக்காரர்களால் எத்தனை உயிர்களை இழந்தோம்!

## தங்கள் இன்னுயிர் ஈந்த தியாக தீபங்களின் குடும்பங்களுக்கு

# ரூ. 15 ஆயிரம் நிதியுதவி

## முதல்வர் புரட்சித்தலைவரின் கண்ணீர்க்காணிக்கை



சென்னை, பிப். 20- என் உடல்நிலைபற்றி வன்னெஞ்சக்காரர்கள் பரப்பிவிட்ட வதந்திகளால் எத்தனை உயிர்களை இழந்தோம்! பல்வேறு துறைகளில் என்னை அழிக்கவும், அகற்றவும் முயன்று தோற்றுப் போன சக்திகள் தங்கள் தீய எண்ணங்களை விற்பனை செய்ய மக்கள் சமுதாயத்தை எந்த அளவு பொய்களால் ஆட்டிப் படைத்திருக்கிறார்கள் என்பதை நானறிவேன் என்று முதல்வர் புரட்சித்தலைவர் ஒரு கண்ணீர் அறிக்கையை விடுத்து இருக்கிறார்.

உயிரை மாய்த்துக் கொண்ட தியாக தீபங்களின் 22 குடும்பங்களுக்கு ரூ. 15 ஆயிரம் வீதமும், உயிர்பலி முயற்சியால் பாதிக்கப்பட்டு சிரம வாழ்க்கையை எதிர்நோக்கியுள்ள 20 குடும்பங்களுக்கு ரூ. 10 ஆயிரம் வீதமும் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் நிதியிலிருந்து கண்ணீர்க் காணிக்கையாக அளிக்கப்படுகிறது என்றும் புரட்சித்தலைவர் அறிவித்துள்ளார்.

### செல்வி ஜெயலலிதா சந்திப்பு:

## முக்கியத்துவம் எதுவும் இல்லை: புரட்சித்தலைவர் அறிக்கை

முதல்வர் புரட்சித்தலைவர் விடுத்துள்ள ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

செல்வி ஜெயலலிதா எம்.பி. 19-2-85 காலை என்னைத் தலைமைச் செயலகத்தில் சந்தித்தார்.

இது சாதாரண முறையிலான, மரியாதையை தெரிவிக்கும் வகையிலான சந்திப்பே யொழிய வேறு முக்கியத்துவம் எதுவும் இல்லை.

செல்வி ஜெயலலிதா எம் பி. அவர்கள் சில அமைச்சர்கள் பற்றி புகார் செய்ததாகவும், அந்த அமைச்சர்களை வைத்து நான் விசாரணை நடத்தியதாகவும் சில பத்திரிகைகளில் வந்துள்ள செய்தி தவறானதாகும்

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் அறிக்கையில் கூறியுள்ளார்.

கடந்த ஆண்டு அக்டோபர் திங்கள் 5-ந் தேதி சென்னை அப்பல்லோ மருத்துவமனையில் நான் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெறத் தொடங்கியது முதல் என் உடல் நலத்தைப்பற்றிப் பல்வேறு செய்திகள் உலாவரத் தொடங்கின.

### வன்னெஞ்சம் பரப்பிய வதந்தி

என் உடல்நிலையில் சற்றும் எதிர் பாராத வகையில் கவலை தரத்தக்க சூழ்நிலை அக்டோபர் 13-ந் தேதி ஏற்பட்டதும் மனிதாபிமானம் அற்ற — வன்னெஞ்சக்காரர்கள் அந்தச்சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டு தங்களது அந்தரங்க ஆசைகளையே வதந்திகளாகப் பரப்பிவிட்டனர்.

### நெஞ்சத்தில் ஆழமான வடுக்கள்

என்பால் உயிரையே வைத்திருந்த தமிழக மனித தெய்வங்கள் கல்மனக்காரர்களால், திட்டமிட்டு பரப்பப்பட்ட வதந்திகள் காரணமாகத் தங்கள் தேகத்தில், தீயிட்டுக் கொண்டும், நஞ்சு அருந்தியும், இன்னும் பல்வேறு முறைகளைக் கையாண்டும், என் ரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புகள் பலர் தங்கள் இன்னுயிரை பலியிட்டுக் கொண்டார்கள் என்ற துயரச் செய்தி என் நெஞ்சத்தில் ஆழமான வடுக்களை ஏற்படுத்திவிட்டன.

குடும்பத் தலைவர்களை. - சம்பாதிக்கும் வாலிபர்களை, - இல்லறப் பொறுப்பேற்றுள்ள தாய்க்குலத் தங்கங்களைக், கல்வி பயிலும் மாணவர்களை எல்லாம் நானும், அவர்கள் குடும்பங்களும் இழந்து நிற்கிறோம்.

என்னைக் கண்ணால் காண முடியுமா என்ற ஐயத்திலேயே தங்கள் விலை மதிப்பற்ற உயிர்களை பலி கொடுத்துவிட்ட அந்த அன்புத் தெய்வங்களை இனி எப்படி நம்மால் பெற இயலும்?

தங்களையே பலிகொடுத்துக் கொண்ட அந்தத் தியாகச் செம்மல்களுக்கு எப்படி எனது நன்றியைச் செலுத்துவது?

அவர்களை இழந்து வாடும் உற்றார் உறவினருக்கு எப்படி ஆறுதல் கூறுவது?

இத்தகைய உடன்பிறப்புக்களை இழந்து நிற்கிற என்னுடைய இதயம் வடிக்கிற இரத்தக் கண்ணீரை எப்படித் துடைத்துக் கொள்ளுவது என்றெல்லாம் என்மனம் தேம்பி அழுதபடி திகைத்து நிற்கிறது.

என் மீது இந்தத் தமிழ் சமுதாயம் கொண்டுள்ள ஈடு இணையற்ற பற்று என்றும் நினைத்து போற்றுவதற்குரிய ஒன்றாகும், என்றாலும் என் மீது உள்ள அன்பை வெளிப்படுத்த என் அருமை உடன்பிறப்புகள், இப்படியா தங்கள் முடிவை அமைத்துக்கொள்வது?

(2-ம் பக்கம் பார்க்க)

# சாவித் துவாரத்தை விட்டுக் கொஞ்சம் தள்ளி நில்லுங்கள்...!

எனக்கு மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கியது கண்டு என்மனைவி ஓடிவந்து- "என்ன,என்ன வாயிற்று உங்களுக்கு?" என்று பதறினாள்.

**"ஒன்றுமில்லை, மாலைப் பத்திரிகைகளைப் படித்து முடித்தேன். ஒரே நேரத்தில் ஆயிரக்கணக்கான பொய்களை விழுங்க வேண்டி வந்ததால் மூச்சுத் திணறுகிறது" என்று சொன்னேன்.**

இவருக்கு என்னவாயிற்று என்பது போல என்னை ஒரு மாதிரியாகப்பார்த்து விட்டு என் மனைவி என்னைவிட்டு அகன்றாள்.

"முன்பெல்லாம், பத்திரிகையில் ஒரு செய்தி வந்து இருக்கிறது என்றால் பொது மக்கள்- "அப்படியா... 'அப்போ... அது சரியாக இருக்கும்' என்பார்கள். தற்போது பத்திரிகையில் வந்திருக்கிறது என்று சொன்னாலே-'பத்திரிகையில் வந்திருக்கிறதா? அப்போ நிச்சயமாகப் பொய்' என்று மக்கள் முடிவுக்கு வந்து விடுகிறார்கள்" என்று என் நண்பர் ஒருவர் ஒரு முறை கூறியது என் நினைவுக்கு வந்தது.

**கடந்தசில மாதங்களாக தமிழகத்தில் பத்திரிகை தர்மம் படும்பாட்டைக் கண்டு நல்லவர்கள்நொந்து போய் இருக்கிறார்கள்.**

**1984 அக்டோபர் முதல் கடந்த ஐந்து மாதங்களாக பத்திரிகைகளில் வெளிவந்த செய்திகளைத் தொகுத்துப் பார்த்தால்.... உண்மைக்கும் அதற்கும் காத தூரம் இருப்பதை உணர முடியும்.**

அப்படி எழுதியவர்களும் தாங்கள் எழுதியவற்றை இப்போதுபடித்து பெருமையடையலாம். ஏனெனில் அவர்களது 'கற்பனா சக்தியின்' 'மேதாவிலாசத்தின்' நிரந்தர சாட்சியங்களாக அவை விளங்கிக் கொண்டு இருக்கின்றன.

**ஆனால்.. 'இதயம்' என்று ஒன்று அப்படி எழுதும்போது இருந்ததா என்று அவர்களது மனச்சாட்சியே அவர்களைக் கேட்குமானால், அதற்கு நாம் பொறுப்பாளியல்ல.**

தமிழகத்தின் காவல் தெய்வமாம் புரட்சித் தலைவர் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட அந்த அக்டோபர் 5ஆம் நாள் முதல் தமிழகப் பத்திரிகைகள் பேய்க்கூத்து ஆடித் தீர்த்தன.

**பொய்மை வணிகர்கள் வலையில் சிலர் விழுந்ததால் -அவர்களது 'கல்லாப்பெட்டி' கனத்ததே தவிர.. கறுப்பு மனம் படைத்தவர்களின் கனவு எதுவும் பலிக்கவில்லை.**

**அப்பல்லோ மருத்துவமனையில் தர்மம்தலைசாய்த்து ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தபோது-**

தர்மத்திற்கும் முடிவுண்டு என்று கருதிய, கிஞ்சிற்றும் மனிதாபிமானமற்ற வஞ்சக நெஞ்சகங்களின் சொந்தக்காரர்களை - அவர்களது எழுத்துக்களை உலகம் மறந்துவிடவில்லை.

**அமெரிக்க மருத்துவர்கள் எப்போது வருகிறார்கள் என்று தமிழ்க்குலமே விண்ணை நோக்கிய வண்ணம் பதறித் தவம் கிடந்தபோது-**

**"ராஜாஜி ஹால் தயார் ஆகிறதாமே, இதையெல்லாம் தெரிந்து கொள்ளாத நீ என்ன நிருபர்?" என்று கேட்ட கொடூரமான பத்திரிகை முதலாளிகள் பற்றியும் தமிழகம் தெரிந்து தான் வைத்திருக்கிறது.**

**உண்மை உறங்கிக்கொண்டிருந்த நேரத்தில் பொய்மைக்கு ஒளியூட்ட முயன்றவர்கள் இன்னும் ஓய்ந்த பாடில்லை.**

எனக்கு ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது. சென்னை, தமிழ்நாட்டிற்கா, ஆந்திரத்திற்கா என்ற பிரச்சினை பூதாகாரமாகக் கிளப்பப்பட்ட நேரத்தில்...

தமிழ் பத்திரிகை ஒன்றில் "சென்னை தமிழருக்கே" என்றும்தெலுங்குப்பத்திரிகையில் "மதராஸ் மனதே" என்றும் தலையங்கம் தீட்டினார்கள். இந்த இரண்டு பத்திரிகைகளும் ஒரே கட்டிடத்திலிருந்துதான் வெளிவந்தன, ஒரே நபரால்தான் நடத்தப்பட்டன.

**அதைப் போலவே இன்றைக்கும் ஒரே கட்டிடத்தில் இருந்து வெளியாகும் தமிழ்ப் பத்திரிகையில் ஒரு மாதிரியாகவும், ஆங்கிலப் பத்திரிகையில் வேறு ஒரு மாதிரியாகவும் வெளிவருகிற வாண வேடிக்கை விந்தை விளையாட்டுக்களையும் அனைவரும் பார்த்துக்கொண்டு தான் இருக்கிறார்கள்.**

## கார்க்கி

இப்படி எந்த முறையுமின்றி, நெறியுமின்றி, வரையறையுமின்றி, எத்துவேலையை எழுத்தாக்கிப் பிழைப்பவர்கள் தான்-

"பத்திரிகை தர்மம்!" பற்றியும், 'பத்திரிகை சுதந்திரம்" பற்றியும் வாய்கிழியப் பேசிக் கொண்டு இருக்கிறார்கள்.

எல்லாவற்றையும் தாங்கிக் கொள்ளும் சக்திபடைத்த தமிழகம் இவற்றையும் தாங்கிக் கொண்டிருக்கிறது.

புண்ணியபுருஷர், தவசீலர், இதயதெய்வம் புரட்சித்தலைவர் தாயகம் திரும்பிய பின்னரும்.. இன்னும் கூட சலசலப்புக்கள் சில நேரங்களில் உருவாக்கப்படுகின்றன.

**முதல்வரின் பதவியேற்பு விழாவிற்குப் பத்திரிகைகள் அழைக்கப் படாதது குறித்து வானத்திற்கும், பூமிக்குமாகத் தாவிக் குதித்த பத்திரிகையுலக ஜாம்பவான்கள்- அதை 'ஓர் அசாதாரண சம்பவம்' என்று குறிப்பிட்டார்கள்.**

அசாதாரணமான போக்கையே தங்களது நடைமுறையாக்கிக் கொண்டுவிட்ட பிறகு தமிழகப் பத்திரிகையாளர்களுக்கு இதையெல்லாம் பற்றிப்பேச தார்மீக உரிமையுண்டா? நல்லெண்ணம் படைத்தவர்கள் தீர்ப்புக் கூறட்டும்.

தமிழகத்தில் அமைச்சரவை அமைக்க வேண்டியவர் தன்னேரில்லாத் தானைத் தலைவர் புரட்சித்தலைவர்.

**ஆனால்.., இந்தப் பத்திரிகையாளர்கள், இந்த மாதத் துவக்கத்தில் எத்தனை முறை தாங்களே மந்திரி சபைகளை அமைத்தார்கள் என்பதையும் நினைவு கூர்வோம்.**

அடிப்படை ஒழுக்கம், சமூக மேன்மைகளுக்குப் புறம்பான போக்குகள் பத்திரிகைகளில் மலிந்து விட்டன என்று தமிழக மக்கள் கருதுகிறார்கள்.

**சாவித் துவாரங்களில் கண்ணையும், காதையும் வைத்துக்கொண்டிருப்பது தான் "பத்திரிகை தர்மம்" என்று சொல்கிற தைரியம் இன்னும் யாருக்கும் வந்திருக்க முடியாது; வந்துவிடக்கூடாது. அது உடம்புக்கு நல்லதல்ல.**

**"இவற்றையெல்லாம் மக்கள் பார்த்துக் கொள்வார்கள்" என்ற இதயதெய்வம் புரட்சித்தலைவரின் வார்த்தைகளே நமக்கு ஆறுதலாக இருக்கிறது.**

# கண்ணீர் காணிக்கை... (முதற்பக்கத் தொடர்ச்சி)

இந்த வழியை நான் ஒரு நாளும் ஊக்குவிப்பவன்அல்ல.

## இது வழியல்ல...

## பெருமை அல்ல

**'எனக்காக இத்தனை பேர் உயிர்த்தியாகம் செய்து கொண்டார்கள் பார்த்தீர்களா?' என்று பெருமை பேசிக்கொள்பவனும் அல்ல.**

இப்போது மட்டுமல்ல, எப்போதும் எதற்காகவும், தங்களைத் தாங்களே பலியிட்டுக் கொள்ளுவது அல்லது அழித்துக் கொள்ளுவது போன்ற வழிமுறைகள் என் இதயதெய்வம், அமரர் பேரறிஞர் அண்ணா அவர்களாலோ, என்னாலோ ஏற்றுக்கொள்ளப்பட்டவை அல்ல என்பதை திட்டவட்டமாகத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த உயிர்தியாகங்கள் தமிழகத்தில் வதந்திகளை உருவாக்கிய வன்னெஞ்சக்காரர்களின் அற்பபுத்தியினால் விளைந்த பலிகளாகும்.

## என்னை அழிக்கவும், அகற்றவும் முயன்று தோற்றவர்கள்

அதுமட்டுமல்ல, பல்வேறு துறைகளில் என்னை அழிக்கவும், அகற்றவும் முயன்று தோற்றுப்போன சக்திகள் தங்கள் தீய எண்ணங்களை விற்பனை செய்ய, மக்கள் சமுதாயத்தை எந்த அளவு பொய்களால் ஆட்டிப்படைத்திருக்கிறார்கள் என்பதையும் நான் தெரிந்துகொண்டேன்.

அந்த தீயசக்திகள் மேலும்தோல்வி கண்டன. மக்களின் ஒன்றுபட்ட விருப்பத்தால் நான் மீண்டும் முதல்வர் பொறுப்பேற்று உடல்நலத்துடன் பணியாற்றி வருவதைத் தியாக தீபங்களாகிவிட்ட என் ரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புக்கள் கண்டு மகிழ வாய்ப்பற்றுப்போய் விட்டதே என்கிற வருத்தம் என் நெஞ்சைக் குடைகிறது.

**விலைமதிப்பற்ற உயிர்களை பலி கொடுத்தவர்களின் குடும்பத்திற்கு ஏற்பட்டுள்ள இழப்பை யாராலும் ஈடு செய்ய இயலாது.**

அவர்கள் நினைவிற்கு நான் எனது வாழ்நாள் முழுவதும் கண்ணீரால் அஞ்சலி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்.

தங்களைப் பலி கொடுத்துக் கொண்டு என்மனதில் நீங்கா இடம்பெற்ற அந்தச் செம்மல்களை வணங்குகிறேன்.

**உற்றார், உறவினருக்கு என் இதயத்தின் ஆழத்தில் இருந்து ஆறுதலைத் தெரிவிக்கிறேன்.**

**தங்களை உயிர்பலி கொடுத்தவர்களின், 22 குடும்பங்களுக்கு ரூ. 15 ஆயிரம் வீதமும் பல்வேறு தியாக முயற்சிகளால் பாதிக்கப்பட்டு செயல்படமுடியாதநிலையில் எப்படியோ, உயிர் தப்பிவிட்ட நிலையில், சிரம வாழ்க்கையை, எதிர்நோக்கியுள்ள 20 குடும்பங்களுக்கு ரூ. 10 ஆயிரம் வீதமும், அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக, நிதியிலிருந்து அளிக்கப்படும் என்பதைத் தெரிவித்து கொள்கிறேன்.**

## உயிர்த் தியாகத்தை ஈடுசெய்ய முடியுமா?

**இந்தத் தொகை எவ்வகையிலும் உயிர்த்தியாகத்திற்கு ஈடு அல்ல. எனினும் இன்றைய சூழ்நிலையில் வெறும் அனுதாபம் என்பதோடு நில்லாமல் செயலளவில் துயர் நீக்கப்பட ஏதாவது செய்யப்பட வேண்டும் என்கிற உந்துதலினால்; இவற்றை அறிவித்துள்ளேன்.**

## இதோ... எனது கண்ணீர்க் காணிக்கை

**என் அன்பு உடன்பிறப்புகளைஇழந்து தவிக்கும் குடும்பத்தினர் என்னுடைய கண்ணீர் காணிக்கையை ஏற்று நான்நேரில் வந்து ஆறுதல் சொல்லித் தொகை வழங்குவதாகக் கருதி அன்புடன் ஏற்றுக் கொள்ள வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறேன்.**

அண்ணா நாமம் வாழ்க.

அன்பன்,

Edited and Published by [illegible] RAVI[illegible]RAN on behalf of Thangamani Public[illegible] and printed by All India Anna D. M. K. [illegible] Anna Trust Press at 34, Nelson Manick[illegible] Road, MADRAS-600029

## தமிழர்களைக்கொன்றுகுவிப்பதை இனியும் பொறுக்க முடியாத நிலை வந்துவிட்டது!

# இலங்கை மீது கடும் நடவடிக்கை

## பிரதமரிடம் பழனியாண்டி வலியுறுத்தல்

**சென்னை, பிப். 20- இலங்கையில் தமிழர்கள் படுகொலை செய்யப்படுவதை இனியும் பொறுக்க முடியாத நிலை வந்துவிட்டது. எனவே இலங்கைக்கு எதிராக கடும் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று பிரதமருக்கு தமிழ்நாடு இ. காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி தந்தி கொடுத்தார்.**

தமிழ்நாடு இ. காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி நிருபர்களுக்கு அளித்தபேட்டியில் கூறியதாவது:-

இலங்கையிலிருந்து அகதிகளாக வருவோரின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது.

இலங்கைப் பிரச்சினையில் இனியும் பொறுமை காட்ட முடியாது என்கிற அளவுக்கு நிலைமை உள்ளது.

எனவே விரைவில் இப்பிரச்சினைக்கு முடிவு காண வேகமான நடவடிக்கை தேவை.

தமிழக மீனவர்களின் உயிர்உடமைகளைக்காக்கும் வகையில் ராமேஸ்வரம் பகுதியில் கப்பல் படை ரோந்துப் படகுகள் அதிக அளவில் நிறுத்தப்பட வேண்டும்.

இந்திய அரசு இலங்கையுடன் பேச்சு வார்த்தை நடத்த வேண்டும் என்பது குறித்து பிரதமருக்குதந்திஅனுப்பியுள்ளேன்.

இவ்வாறு பழனியாண்டி கூறினார்.

### முதல்வருடன் சந்திப்பு

முதல்வர்புரட்சித்தலைவரை சந்தித்ததாகவும் பழனியாண்டி தெரிவித்தார். பொது விஷயங்கள் குறித்து முதல்வருடன் பேசியதாக அவர் கூறினார்.

### தமிழர் சடலங்கள்

தஞ்சை மாவட்டம் குப்பத் தேவன் கிராமத்தில் கடற்கரையில் ஒருசடலம் கண்டெடுக்கப்பட்டது. புதுக்கோட்டை மாவட்டம் தட்சமவாடி கிராமகடற்கரை ஓரத்தில் 2பிணங்கள்கண்டுபிடிக்கப்பட்டன.

வருவாய்த் துறைஅதிகாரிகள் பிரேத விசாரணை நடத்தினர். 3சடலங்களிலும் துப்பாக்கி குண்டுக் காயங்கள் காணப்பட்டன.

இவை இலங்கைத் தமிழர்களின் சடலம் என்று கருதப்படுகிறது.

சிங்கள ராணுவத்தினரால் சுடப்பட்டு அவர்கள் கொலை செய்யப்பட்டிருக்கலாம் என்றகருத்து நிலவியது.





### அமைச்சர் கோவேந்தன் தாத்தா ஆனார்

சென்னை, பிப். 20- அமைச்சர் கோவேந்தனின் இளையமகள் கோப்பெருந்தேவி பெண் குழந்தைக்கு தாயாகியுள்ளார். தாயும், சேயும் நலமாக உள்ளனர். கோப்பெருந்தேவியை மருத்துவமனையில் அமைச்சர் விஜயலட்சுமிபழனிச்சாமி சென்று பார்த்தார்.

சென்னையில்

### தென்னிந்திய கைக்கடிகார விற்பனையாளர் சங்க வெள்ளி விழா

சென்னை, பிப். 20- தென்னிந்திய கைக்கடிகார விற்பனையாளர் சங்கத்தின் வெள்ளிவிழா சென்னை வி. ஜி. பி. தங்கக் கடற்கரையில் நடைபெற்றது.

விழாவில் சட்டமன்ற மேலவைத் தலைவர் ம. பொ. சி., அமைச்சர் டாக்டர் அண்டே, வி.ஜி.பன்னீர்தாஸ், சென்னை நகர துணை ஷெரீப், வி. ஜி. சந்தோஷம், வி. ஜி, செல்வராஜ் ஆகியோர் கலந்து கொண்டு பேசினர்.

பெங்களூர் எச்.எம்.டி. நிறுவனத்தின், கடிகாரப் பிரிவு ஜெனரல்மேனேஜர் டி' பி, வெங்கடேஷ், டெல்லி ஜயனாடைம் இண்டஸ்ட்ரீஸ்மேனேஜிங் டைரக்டர் கோசி ஜெயின் ஆகியோர் விழாவில் பிரதம விருந்தினராகக் கலந்துகொண்டனர்.

தென்னிந்திய கைக்கடிகார விற்பனையாளர் சங்கத் தலைவர் இந்திரவதன் தமானி, செயலாளர் தோஷி, தினேஷ்ஷா ஆகியோரும் உரையாற்றினார்.



அவைமுன்னவர்கள்நியமனம்

## டாக்டர் நாவலர்- சட்டபேரவை ஆர். எம். வீ.- சட்ட மேலவை

சென்னை, பிப். 20- தமிழக சட்டப் பேரவை முன்னவராக நிதியமைச்சர் டாக்டர் நாவலரும், மேலவை முன்னவராக அமைச்சர்ஆர்.எம். வீயும் நியமிக்கப்பட்டுள்ளனர்.

சட்டப்பேரவையிலும் மேலவையிலும் நடைபெறும் விவாதங்களில் குறுக்கிடவும், அரசு சார்பில் பதில் அளிக்கவும் உரிமை உள்ளவர் அவை முன்னவர்.

சட்டப் பேரவையின் அவை முன்னவராக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் நியமிக்கப்பட்டுள்ளார். இதற்கான உத்தரவை ஆளுநர் குரானா பிறப்பித்தார்.

### மேலவை

சட்ட மேலவைக்கு அவை முன்னவராக செய்தி அறநிலையத் துறை அமைச்சர் ஆர். எம். வீ. நியமிக்கப்பட்டுள்ளார்.

இதற்கான உத்தரவையும் ஆளுநர் குரானா பிறப்பித்துள்ளார்.

## மார்ச் 8-ந் தேதி சட்டமன்றக் கூட்டுக் கூட்டம்

### ஆளுநர் குரானா உரையாற்றுகிறார்

**சென்னை, பிப். 20- தமிழக சட்டப் பேரவை-மேலவையின் கூட்டுக்கூட்டம் மார்ச் 8-ந் தேதி கூடுகிறது. கூட்டுக் கூட்டத்தில் ஆளுநர் குரானா உரையாற்றுகிறார்.**

சட்டமன்ற கூட்டுக் கூட்டத்தில் சட்டமன்ற பேரவை, மேலவை உறுப்பினர்கள் ஒன்றாக உட்காருவார்கள்.

கூட்டுக் கூட்டத்தில் உரை நிகழ்த்த வரும் ஆளுநரைசட்டமேலவைத் தலைவர் ம. பொ. சி., பேரவை சபாநாயகர் இருவரும் அழைத்து வருவார்கள்.

வழக்கமாக இப்போது சபாநாயகர் அமரும் ஆசனத்தில் ஆளுநர் அமருவார்.

ஆளுநருக்கு இருபுறமும் மேலவைத் தலைவரும் பேரவை, சபாநாயகரும் அமருவார்கள்.

அதற்கு கீழே இரண்டு இருக்கைகளில் இரு அவைகளின் செயலாளர்களும் அமர்ந்திருப்பார்கள்.

ஆளுநர் உள்ளே வந்து அமர்ந்தவுடன் தமிழக அரசின் திட்டங்கள் பற்றி உரை நிகழ்த்துவார்.

ஆளுநர் உரையுடன் அன்றைய கூட்டம் முடிவடையும்.

அடுத்த நாள்பேரவை, மேலவை இரண்டும்தனித்தனியாகக் கூடும்.



### புரட்சித்தலைவரது பொற்கால ஆட்சி சாதனை காண மக்கள் வெள்ளம்

# சென்னைசுற்றுலா கண்காட்சியின் வசூல் சாதனை

### மார்ச் 20-ம் தேதி வரை நீடிப்பு

**சென்னை, பிப். 20- சென்னை தீவுத் திடலில் நடைபெற்றுவரும் சுற்றுலா கண்காட்சி வசூலில் சாதனை புரிந்து வருகிறது.**

கடந்த ஆண்டு 76நாட்களில் ஆன வசூல், இந்த ஆண்டில் இதற்குள்ளாகவே வந்து விட்டது. மார்ச் 20 வரை கண்காட்சி நீட்டிக்கப்பட்டுள்ளது.

சென்னை தீவுத்திடலில் சுற்றுலா - வர்த்தக கண்காட்சி நடைபெற்று வருகிறது.

இந்தக் கண்காட்சியில் ''வளரும் தமிழகம்'' என்ற பிரிவில் 16 மாவட்டங்களின், வளர்ச்சி கலைகள், கலாசசாரம், அழகு கொழிக்கும் எழில் இடங்கள் எல்லாம் தத்ருபமாக சித்திரிக்கப்பட்டுள்ளன.

வளரும் தமிழகத்தில் பங்குபெற்ற 16 மாவட்ட காட்சி அரங்குகளை நிருபர்களுக்கு விளக்கினர்.

செய்தித்துறை செயலாளர் முத்துசாமி, செய்தி மக்கள் தொடர்பு இயக்குனர் கிருஷ்ணபாரதி, துணை இயக்குநர்கள் வி. பி. வீரப்பன், நாமத்தவன், பொது மக்கள் தொடர்பு அதிகாரிகள் நீலகண்டன். ராமநாதன், உதவி அதிகாரி சேது, சுற்றுலா இயக்குநர் பிரபாகரன் ஆகியோர் விளக்கினர்

சுற்றுலா இயக்குநர் பிரபாகரன், செய்தி மக்கள் தொடர்பு இயக்குநர் கிருஷ்ணபாரதி ஆகியோர் கண்காட்சியில் இடம் பெறும்சிறப்பு அம்சங்களை விளக்கினர்.

கள். நரிக்குறவர் சிறுமிகள் நடத்தும் கலை நிகழ்ச்சிகள் கராத்தே போன்றவற்றையும் விளக்கினார்.

### ஏசு வரலாறு

ஏசுநாதர் வரலாற்றை பரத நாட்டியம் மூலம் கிறித்துவ பாதிரியார் பர்போசா 22-ம்தேதி ஆடிக் காட்டுகிறார்.

கண் காட்சியைக்காண மக்கள் வெள்ளம் தினம் தினம் அதிகரித்து வருகிறது. கடந்த ஆண்டு 76 நாட்களில் ஆன வசூல் இந்த ஆண்டில் இதற்குள்ளாகவே வசூலாகி சாதனை புரிந்துள்ளது.

மார்ச் 20-ம் தேதிவரை கண் காட்சி நீடிக்கப்படும் என்று தெரிவித்தனர்.

புரட்சித்தலைவரது பொற்காலஆட்சியில் ஒவ்வொரு மாவட்டமும் எவ்வளவு விரைவான முன்னேற்றத்தை எட்டியிருக்கிறது என்று 16 அரங்குகளிலும் நன்கு சித்திரிக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு மாவட்டமும் அடைந்துள்ள வளர்ச்சி மற்றும் கலைகலாச்சாரங்களை சித்தரிக்கும் வண்ண வீடியோ காட்சிகள் அந்த அந்த அரங்குகளில் காட்டப்படுகின்றன. கியூவில் நின்று, இதனை மக்கள் கண்டு களிக்கின்றனர்.

### 301 பேர் போட்டியிடும்

## பெல்காமில் குப்பை கூடை தேர்தல் சின்னம்

கருநாடக மாநிலம் பெல்காம் தொகுதியில் 301 பேர் போட்டியிடுகின்றனர். இவர்கள் அனைவருக்கும் தேர்தல் சின்னம் ஒதுக்குவதில் பெரும் பிரச்சினை ஏற்பட்டது. முடிவில் அனைவருக்கும் தேர்தல் சின்னம் ஒதுக்கப் பட்டுள்ளது. இஞ்சி, கத்திரிக்காய், வாழைக்காய், சிலந்தி வலை, காக்காய், குருவி பட்டப்பன, ஊர்வன போன்ற அனைத்து வகையான உயிரினங்களின் படங்களும் வேட்பாளர்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ளன. ''குப்பைகூடை'' கூட ஒரு தேர்தல் சின்னமாக ஒதுக்கப்பட்டுள்ளது.

## துறைமுகத்தில் அமைச்சர் யூசுப் உணவு வழங்குகிறார்

சென்னை, பிப். 20— துறைமுகம்பகுதி 47-வது வட்டத்தில் ஏழுகிணறு பூங்கா அருகே இன்று காலை 11 மணிக்கு ஜி. எம். ராதாகிருஷ்ணன் தலைமையில் அமைச்சர் யூசுப் ஏழைகட்கு உணவு வழங்குகிறார்.

விழாவில் எம். வி. ராமன் கழககொடியேற்றுகிறார். மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, எம். எ. காதர், கு. ஜேந்திரபாபு, வி. கே. கபூர், எம் எஸ். மணி, துரை, நடராசன், கே. செல்லப்பன் அப்பன்ராஜ், குமார். கலைமணி, சுகுமார் மற்றும் பலர் பங்கேற்கின்றனர்.

## சென்னை - டெல்லி ரெயில்பாதை மின்மயமாக்க திட்டம்

புதுடெல்லி, பிப். 20 இந்தியாவிலுள்ள பிராட்கேஜ் ரயில்பாதைகள் எல்லாம் 1990ம் ஆண்டிற்குள் 30 சதவீதம் மின்சார மயமாக்கப்படும். 7 வது திட்டத்தில் இதற்கா 830கோடிரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் டில்லி சென்னை டில்லி-பம்பாய், பம்பாய் கல்கத்தா ஆகிய ரயில் பாதைகள்மின் மயமாக்கப்படும். எரிபொருளை மிச்சப்படுத்தவும், நிர்வாக செலவை குறைக்கவும் இத்திட்டம் உதவும் என்று தெரிகிறது.

## கொசுவைஒழிக்க நவீன கருவிகள்

சென்னை, பிப். 20- சென்னை நகரில் கொசுத் தொல்லையை நீக்க சென்னை மாநகராட்சி தீவிர நடவடிக்கை எடுத்து வருகிறது. கொசு ஒழிப்பு மருந்து புகை மூலம் கொசுக்களை ஒழிக்கும் 20 இயந்திரங்கள் சுமார் 1½ லட்சம் ரூபாய் செலவில் புதிதாக வாங்கப்பட்டுள்ளன.

இத்தகைய புகை மக்களுக்குத் தீங்கற்றது. கொசுக்களும், கொசுவைப்போன்ற பூச்சிகள் மட்டுமே இதனால் பாதிக்கப்படுகின்றன. வீடுகளில் இந்தப் புகையைச் செலுத்தும் போது உணவு பொருள்களை மட்டும் மூடி வைக்குமாறு கட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

புதிதாக வாங்கப்பட்ட இந்தக்கருவிகள் நலிவுற்ற பிரிவினர் வாழும் பகுதிகளிலும், மலேரியா அதிகமாகக் காணப்படும் வண்ணடி, முத்தியால்பேட்டை, சிந்தாதிரிப்பேட்டை. திருவல்லிக்கேணி, மயிலாப்பூர் போன்ற பகுதிகளிலும் பெருமளவில் பயன்படுத்தப்பட இருக்கிறது

பொது மக்கள் நகராட்சிப் பணியாளர்களுடன் ஒத்துழைக்குமாறு மாநகராட்சி தனி அதிகாரி கேட்டுக்கொண்டுள்ளார்.

## தபால் தந்தி இலாகா

**சென்னை**

1-4-85 முதல் 31-3-86 முடிய உள்ள காலத்திற்கு, சென்னை-600105, தமிழ்நாடு வட்டம், டைரக்டர் ஆப் போஸ்ட்அக்கவுண்ட்ஸ் அலுவலகத்திலிருந்து பழையரிகார்டுகள்- வேஸ்ட் பேப்பர் ஆகியவற்றை வாங்கி அப்புறப்படுத்துவதற்கான முத்திரையிட்ட டெண்டர்கள் திரு. கே. பாண்டியன், உதவி பிரதம அக்கவுண்ட்ஸ் ஆபீஸர், (நிர்வாகம்) அவர்கள் பெயரீட்டு 25-3-85 காலை 11 மணிக்கு முன்னதாக வந்து சேரும்படி வரவேற்கப்படுகின்றது.

எந்தஒருடெண்டரையோ அல்லது எல்லா டெண்டர்களையுமே எவ்வித காரணமும் காட்டாமல்நிராகரிக்க கீழ்கையொப்பமிட்டவருக்குபூரணஉரிமையுண்டு. டெண்டர் நிபந்தனைகள் மற்றும் இதர விவரங்கள் ஆகியவை எல்லா அலுவலக நாட்களிலும் காலை11மணி முதல் மாலை 4 மணி வரை பெற்றுக்கொள்ளலாம்.

davp-710 (1346) 84



## நெடுஞ்சாலை மற்றும் ஊரகப் பணித்துறை.

உல , வங்கி திட்ட செயல் வட்டம், சென்னை.

## குறுகிய கால ஒப்பந்த அறிக்கை 2 - 85

தமிழ்நாடு ஆளுநர் அவர்களுக்காக ஆளுநர் சார்பில் கீழ்க்கண்ட வேலைகளுக்கு இத்துறையில் பதிவு செய்யப்பட்ட தகுதியுடைய ஒப்பந்தக்காரர்களிடமிருந்து மூடி முத்திரையிடப்பட்ட இனவாரி ஒப்பந்தப்புள்ளிகள் கண்காணிப்புப் பொறியாளர் (நெ) உலக வங்கி திட்ட வட்டம், சென்னை-4 அவர்களால் 28-2-85 அன்று பிற்பகல் 3-00 மணி வரை (அலுவலக கடிகாரப்படி) பெறப்பட்டு அன்றே பிற்பகல் 3-15 மணிக்கு கண்காணிப்புப் பொறியாளர் (நெ) அவர்களால் ஒப்பந்தக்காரர் அல்லது அவருடைய பிரதிநிதியின் முன்னிலையில் திறக்கப்படும்.

வேலை விபரம்: உள்வட்ட சுற்றுப்புற சாலை சங்கிலி 5558 முதல் 6000 வரை அமைத்தல் (நான்காம் அழைப்பு)

முன்வைப்புத் தொகை ரூ.3130.

ஒப்பந்த நமூனாக்களின் விலைவிற்பனைவரிஉபரிவரி உள்பட ரூ. 52.20.

ஒப்பந்தக்காரரின் தகுதி வகுப்பு மூன்றும் அதற்கு மேலும்.

வேலைமுடிக்க வேண்டிய நாள் முப்பத்தி ஒன்பது வாரங்கள்.

ஒப்பந்த நமூனாக்கள் கிடைக்கும் நாட்கள் 21-2 85 முதல் 27-2-85.

1. ஒப்பந்த படிவம் எல். எஸ், ஒப்பந்தம்

2. ஒப்பந்த நமூனாக்கள் விற்பனைக்குக் கிடைக்கும் இடம்: கோட்டப் பொறியாளர் அலுவலகம் (நெ) உலகவங்கி திட்ட கோட்டம் 1-32 சாந்தோம் நெடுஞ்சாலை சென்னை-600004.

3. முன்பணத்தொகையை சிறுசேமிப்பு! பத்திரம்! டெபாசிட்- கணக்கு ஆகிய வடிவங்களில் மட்டும் பெற்றுக்கொள்ளப்படும் (அரசு ஆணை எண் 227 நிதித்துறை (சிறுசேமிப்பு நாள் 13.4.62-ன் படி) முன்வைப்புத் தொகையை கோட்டப் பொறியாளர் (நெ) உலக வங்கி திட்ட கோட்டம் 1, சென்னை-4 அவர்களின் பேரில் செலுத்தப்படவேண்டும்.

மேற்பார்வை பொறியாளர்

32சாந்தோம்நெடுஞ்சாலை சென்னை-600004.

நாள்: 12.2.85.

DIPR -4368-85 14-maa

## புரட்சித்தலைவர் ஆட்சியின் சாதனை பாரீர்!

## சுயவேலைவாய்ப்புத் திட்டத்தை நிறைவேற்றுவதில்

# இந்தியாவிலேயே தமிழகம் முதலிடம்

## தொழில்வளர்ச்சியில் 3-வது இடத்தில் தமிழகம்

சென்னை, பிப், 20- புரட்சித்தலைவரது பொற்கால ஆட்சியில் தமிழ்நாட்டில் தொழில்புரட்சி நடந்து வருகிறது. தொழில் வளர்ச்சியில் இந்தியாவில் மூன்றாவது இடத்தைத் தமிழகம் பெற்றுள்ளது. சுயவேலை வாய்ப்புத் திட்டத்தில் தமிழகம் முதலிடம் வகிக்கிறது.

தொழில்வர்த்தகத்துறை இயக்குநர் டி.சி. சவ்கான் நிருபர்களிடம் கூறியதாவது:-

தொழில் வளர்ச்சியில் இந்தியாவில் தமிழகம் மூன்றாவது இடத்தை வகித்து வருகிறது.

முதலில் உள்ளது குஜராத், இரண்டாவது மகாராஷ்டிரம், மூன்றாவது தமிழ்நாடு, நான்காவது மேற்கு வங்கம்.

சுயவேலை வாய்ப்பு திட்டத்தில் இந்தியாவிலேயே தமிழகம் தான் முதலிடத்தை வகிக்கிறது.

தமிழகத்தில் 55ஆயிரம் சிறுதொழில்களும், நடுத்தர பெருந்தொழில்கள் 2 ஆயிரமும் உள்ளன.

ஒசூர், ராணிப்பேட்டை கடலூர், புதுக்கோட்டை, மானாமதுரை, தூத்துக்குடி, கும்மிடிப்பூண்டிபகுதிகளில் தொழில் வளர்ச்சி துரிதமாக ஏற்பட்டு வருகிறது.

### தொழில் சலுகை

பிற்பட்ட மாவட்டங்களில் தொழில் துவக்க சலுகை அளிக்கப்படுகிறது. ஒசூர் பகுதி பின் தங்கிய தொழில் வளர்ச்சி பகுதியாக இருந்தது. அங்கு இப்போதுதொழில் வளர்ச்சி வேகமாக முன்னேறி இருப்பதால் அந்த சலுகை நிறுத்தப்பட்டுள்ளது.

எல்காட் நிறுவனம்7வகை கடிகாரங்களை தயாரித்து வருகிறது.

அடுத்த வாரம் முதல் டிஜிட்டல் கைக்கடிகாரங்கள் விலை குறைக்கப்படுகிறது.

ரூ. 520-க்கு விற்கப்படும் கைக்கெடிகாரம் ரூ.350-ஆககுறைக்கப்படுகிறது. அதுபோல ரூ. 250-க்கு விற்கப்படுவது ரூ. 160-க்குகுறைக்கப்படுகிறது. பெண்கள் வாட்ச் ரூ. 150 ஆக இருக்கும்.

இவ்வாறு சவ்கான் கூறினார்.

கண்காட்சியில் மிகப் பெரிய அரங்கமாக தொழில் துறை அரங்கம் 5ஆயிரம்சதுர அடி அளவில் அமைக்கப்பட்டு இருப்பதாக தொழில் துறை மக்கள் தொடர்புஅதிகாரி ஏ. டி. பார்த்தசாரதி கூறினார்,



## விமான விபத்தில் மந்திரி மரணம்

ஸ்பெயின், பிப். 20 ஸ்பெயின் தலை நகர் மாட்டிரிட்டிலிருந்து புறப்பட்ட போயிங் விமானம் ஒன்று ஒரு மலையில் மோதியதில் 151 பயணிகள் மற்றும் 6ஊழியர்கள் உயிரிழந்தனர். இதில் பயணம் செய்த பொலிவியா நாட்டு தொழிலாளர் அமைச்சர் குஜ்மனும் ஸ்பானிஷ் மாஜி வெளிவிவகார அமைச்சரும் இந்த விபத்தில் மரணமடைந்தனர்.

## ராணுவ வீரர்கள் மீது நாகாலாந்து தீவிரவாதிகள் தாக்கு

இம்பால், பிப். 20- மணிப்பூரிலுள்ள உக்ரூல் மாவட்டத்தில் நாகாலாந்து தீவிரவாதிகள் பாதுகாப்பு பணியில் ஈடுபட்டிருந்த ராணுவத்தினர் மீது திடீர்தாக்குதல் நடத்தினர்.

இந்த தாகுதலில் 13 ராணுவ வீரர்களும், 2 பொதுமக்களும் கொல்லப்பட்டதாக மணிப்பூர் மாநில அதிகார வட்டார தகவல் ஒன்று தெரிவிக்கிறது. இந்த சம்பவம் பர்மா எல்லையில் நிகழ்ந்துள்ளது.

## ஈரோடெக்ஸ் விற்பனை நிலைய துவக்க விழா

ஈரோடு, பிப். 20- ஈரோடெக்ஸ் விற்பனை நிலையத் திறப்பு விழா நாளை 21ந்தேதி மாலை ஈரோடுமாவட்ட ஆட்சித் தலைவர் வி.விஸ்வநாதன் தலைமையில் ஈரோடு பெரியகடை வீதியில் நடைபெறுகிறது.

கைத்தறி இயக்குநர் ஆறுமுகம், விழாவில் பங்கேற்று, விற்பனை நிலையத்தை துவக்கி வைக்க, நாச்சிமுத்து, விழாவை துவக்கி வைக்கிறார்.

முதல் விற்பனையை எத்திராஜ் துவக்கிவைக்க ஜெயபாலன் முதல் விற்பனை பெருமையைபெற்றுக் கொள்கிறார்.

## தற்காலிக சபாநாயகராக ப.உ.ச.

சென்னை, பிப். 20— தமிழக சட்டப்பேரவையின் தற்காலிக சபாநாயகராக ப. உ. ச. நியமிக்கப்பட்டுள்ளார்.

நடந்து முடிந்த சட்டப்பேரவைத் தேர்தலில் எம். எல். ஏக்களாக தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் வரும் 25-ந் தேதி பதவி ஏற்கிறார்கள்.

தற்போதையசபாநாயகர் ராசாராம் பதவிகாலம் 24-ந் தேதியுடன் முடிவடைகிறது.

சபையின் மூத்த உறுப்பினர் தற்காலிகசபாநாயகராக ஆளுநரால் நியமிக்கப்பட வேண்டும். புதிய எம். எல். ஏக்களுக்கு தற்காலிக சபாநாயகர்பதவிப்பிரமாணம் செய்துவைக்க வேண்டும் என்று அரசியல் சட்டத்தில் கூறப்பட்டுள்ளது.

தற்காலிக சபாநாயகராக முன்னாள் அமைச்சரும் கழக பொதுச்செயலாளருமான ப.உ.ச.வை ஆளுநர் குரானா நியமித்துள்ளார்.

கடந்த டிசம்பர் மாதம் நடந்த தேர்தலில் தென்னாற்காடு மாவட்டம் மேல்மலையனூர்தொகுதியில் இருந்து ப. உ. ச. சட்டப்பேரவைக்குதேர்ந்தெடுக்கப்பட்டார்.



அத்துடன் சபைக்கூட்டம் தள்ளி வைக்கப்படும்.

### சபாநாயகர் தேர்தல்

புதிய சபாநாயகர் தேர்தல் 27-ந்தேதி நடைபெறும்.

போட்டியிட விரும்புவோர், 26-ந்தேதி பகல் 12மணிக்குள் மனு தாக்கல் செய்யவேண்டும்.

போட்டியிருந்தால் 27ந் தேதி தேர்தல் நடைபெறும். எம். எல். ஏக்கள் ஓட்டுப் போட்டு புதிய சபாநாயகரைத் தேர்ந்தெடுப்பார்கள்.

பின்னர் புதிய சபாநாயகர்தலைமை ஏற்று, துணை சபாநாயகர் தேர்தலை நடத்துவார்.

## நெல்லையில் கதர்வாரியம் புதியதொழில் துவங்குகிறது

தூத்துக்குடி பிப். 20, தமிழ்நாடு கதர் கிராம வாரியம் நெல்லை மாவட்டம் மணி முத்தாறுவில் ரூ.15. லட்சம் செலவில் சாய தொழிற்சாலை ஒன்றையும், முக்கூடலில் ரூ.5 லட்சத்தில் பருத்தி தொழிற்சாலை ஒன்றையும் துவக்க இருப்பதாக கதர் வாரிய துணை இயக்குனர் நாரயாணன்இங்கு நிருபர்களிடம் தெரிவித்தார்.

இந்த ஆலைகள் மூலம் 200பேர் வேலை வாய்ப்பு பெறுவர் என்றும் நாரயாணன் நிருபர்களிடம் கூறினார்.